30th September 1958]

**Sri S. LAZAR** : எங்கெங்கு வேலையிருக்கிறது என்ற தகவல் இந்த காரியாலயங்களுக்கு வந்தவுடன் அவர்கள் அந்த "ப்ரையாரிட்டி லிஸ்ட்" பிரகாரம் அனுப்பும்போது அப்படி ஆஜராகவேண்டிய தினத்திற்கு எவ்வளவு நாட்கள் முன்னதாக அது அனுப்பப்படுகிறது? வெகு சந்தர்ப்பங்களில் அதன் கெடு தீர்ந்தபிறகுத்தான் அனுப்பப் படுகிறது என்ற புகார் வந்திருக்கிறதா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அப்படி ஒரு புகாரும் வரவில்லை, தகவலும் வரவில்லை. குறிப்பான விவரங்களை அங்கத்தினர் அவர்கள் கொடுத்தால் அதை கவனிக்கறேன்.

**Sri S. M. ANNAMALAI** : பல இலாகாக்களிலும் ஆட்கள் தேவை என்று வரும்போது இந்த வேலை தேடித்தரும் நிலயங்களின் மூலமாகத்தான் எடுக்கவேண்டுமென்று சர்க்கார் விதியிருக்கிறது. அப்படி அந்த விதியை மாற்றி அவர்களே நேரடியாக ஆட்களை தேர்ந் தெடுத்துக்கொள்கிறார்கள் என்பது சர்க்காருக்குத் தெரியுமா? அதைத் தடுப்பதற்கு ஏதாவது திட்டமிருக்கிறதா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அம்மாதிரி புகார்கள் இருந்தால், அதை என் கவனத்திற்கு கொண்டு வந்தால் கவனிக்கிறேன்.

**Sri T. IRUSAPPAN** : வேலை தேடித் தரும் ஸ்தாபனத்தில் எஸ்.எஸ்.எல்.ஸி., இன்டர்மிடியட் படித்துவிட்டு பதிவு செய்து கொள்கிறார்கள். 25 வயதிற்குள் வேலையில் அமரவேண்டுமென்று விதி யிருக்கிறது. அதற்குள் வேலை கிடைக்கவில்லை என்றால் அப்படி வேலை கிடைக்கும்படி சர்க்கார் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்குமா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : "எம்ப்ளாய்மென்ட் எக்ஸ்சேன்ஞ்", வேலை தேடித் தரும் ஸ்தாபனமாகும். ஆனால் வேலையில் அமர்த்துவதற்கு சில விதிகள் இருக்கின்றன. அது வேறு விஷயம்.

*Travelling allowances drawn by Ministers*

* 645 *Q.*—**Sri P. U. SHANMUGAM** : Will the Hon. the Chief Minister be pleased to state the amount of Travelling Allowances drawn by each Minister who undertook a tour and participated in the Election propaganda in connection with the Tuticorin Bye-election held recently?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : Only the Chief Minister, the Home Minister, the Minister for Finance and the Minister for Works visited Tuticorin in connection with the Tuticorin Bye-election, but no Travelling Allowance was claimed by them.

**Sri D. S. AUTHIMOOLAM** : உப தேர்தல்களில் கூடுமான வரையில் மந்திரிகள் பங்கு எடுத்துக் கொள்ளாமல் இருப்பது நல்லது. ஆகையால் அப்படி ஒரு "கன்வென்ஷன்" ஏற்படுத்துவது நல்லதென்று "சீப் எலெக்டோரல் கமிஷனர்" ஏதாவது தாக்கீது அனுப்பினார்களா? அதைப்பற்றி சர்க்கார் ஆலோசனை செய்திருக்கிறார்களா?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அம்மாதிரி தாக்கீது ஒன்றும் அனுப்பப்படவில்லை. இந்த சர்க்காரைப் பொறுத்த வரையில், மந்திரிகள் முக்கியமாக தேர்தல்களில் பங்கு எடுத்துக்கொள்வது மிக அவசியம். என்னென்ன காரியங்கள் செய்வோம் என்று வாக்குறுதி கொடுத்தோமோ அவைகளை எந்தளவு செய்திருக்கிறோம், பிற்காலத்தில் என்ன செய்யப் போகிறோம் என்றெல்லாம் திட்டவட்டமாக மக்களிடம் எடுத்துச் சொல்லி வோட்டு கேட்பது நல்லது. அப்படி நாங்கள் முன்பு கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றவில்லை என்றால், மந்திரிகள் வந்த

சொன்னார்களோ அவைகளை நிறைவேற்றவில்லையே என்று கேட்க சந்தர்ப்பம் இருக்கும். யாரோ பேசினால் அவர்கள் பேசியதற்கு மந்திரிகள் பொறுப்பாளிகளாகமாட்டார்கள் என்று சொல்லலாம்.

SRI K. ANBAZHAGAN : பொதுவாக தேர்தல் நேரத்தில் அமைச்சர்கள் வாக்குறுதி அளிப்பது, தேர்தல்களில் வாக்காளர்களை தங்கள் பக்கம் இழுக்க காட்டப்படும் ஆசை வார்த்தைகள் ஆகும். அப்படி ஆசை வார்த்தைகள் காட்டுவது நியாயமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நாங்கள் என்ன செய்கிறோம், என்ன செய்யப் போகிறோம் என்ற திட்டங்களை விளக்குவது மிக அவசியம். வெறும் ஆசை வார்த்தைகளாக இருந்தால், யார் ஆசை வார்த்தைகள் காட்டுகிறார்கள், யார் காரியங்களை செய்கிறார்கள் என்பதை மக்கள் நன்கு உணர்ந்து கொள்வார்கள்.

*Medical Colleges*

* 646 *Q.*—MR. SPEAKER : The hon. Member, Sri T. T. Daniel is not in his seat. The question and the answer will be printed in the proceedings.

SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the authorities of the Medical Colleges in the State have issued notification cancelling admission to Intermediate and B.Sc., students to the First Year M.B.B.S. Course ; and

(*b*) whether the Government propose to adopt measures to provide accommodation for these students as well?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) No, Sir.

*Aid to Harijan ryots*

* 647 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state the allotment made in 1958–59 district-wise for the grant of subsidies to Harijan ryots for the purchase of plough bulls, agricultural implements and seeds?

THE HON. SRI P. KAKKAN : A statement[a] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : ஹரிஜன விவசாயியோடுகூட சம்பந்தப்பட்ட அதிகாரிகள் சென்று அவர்களுக்கு மாடுகள் வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று சர்க்காரால் உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்தும் அம்மாதிரி நடைபெறுவதில்லையாதலால் அவர்களோடு சென்று அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வதற்கு அரசாங்கம் உத்தரவு பிறப்பிக்குமா என்று அறியவிரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : ஜில்லா ஹரிஜன இலாகா அதிகாரிகள் அப்படித்தான் மாடுகள் வாங்கி திருவிளக்குச் சீட்டு விழுகிறவர்களுக்கு மாடுகள் வழங்கி வருகிறார்கள். ஏதாவது குறிப்பிட்ட புகார் இருந்தால் கனம் அங்கத்தினர் அதை எழுத்து மூலமாக எனக்குத் தெரிவித்தால் நான் நடவடிக்கை எடுத்துக்கொள்கிறேன்.

[a] Printed as Appendix V on page 1129 infra.